

# டிஜிட்டல் விளம்பரங்களை தடுப்பது எப்படி?

பிரசன்ன வெங்கடேஷ்

**மின்னூல் வெளியீடு : http://FreeTamilEbooks.com**



பதிவிறக்கம் செய்ய - http://FreeTamilEbooks.com/ebooks/how_to_block_ads_in_digital_medium

அட்டைப்படம் - கணேஷ் கோபால் - ask@fsftn.org

மின்னூலாக்கம் - கணேஷ் கோபால் -

# மின்னூல் வெளியீடு

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com

அட்டைப்படம்: கணேஷ் கோபால் ஷ் - ask@fsftn.org

மின்னூலாக்கம்: கணேஷ் கோபால் - ask@fsftn.org

# Ebook Publication

Ebook Publisher: http://freetamilebooks.com

Cover Image: Ganesh Gopal - ask@fsftn.org

Ebook Creation: Ganesh Gopal - ask@fsftn.org

This Book was produced using LaTeX + Pandoc

# பொருளடக்கம்

# 1. ஏன் தடுக்க வேண்டும் ?

நாம் அன்றாடம் பயன்படுத்தும் ஸ்மார்ட்ஃபோன், (மடிக்கணினி, ஸ்மார்ட் டிவி என அனைத்திலும் விளம்பரங்கள் புகுத்தப்பட்டுவிட்டன. ஒரு வலைதளத்துக்கு போயி ஏதாவது ஒரு செய்தியோ அல்லது கட்டுரையோ படிக்கலாம்னு போனா.... அங்க

ஒரு நாலஞ்சு விளம்பரங்கள் கவனச்சிதறல் ஏற்படுத்துது.

Youtube-ல ஒரு வீடியோ உருப்படியா பார்க்க முடியல. ஒரு வீடியோ முழுசா முடியறதுக்குள்ள மூணு நாளு விளம்பரம் வருது. போதாததுக்கு வீடியோ போட்றவங்களே அங்கங்க எதையாவது promote பண்றாங்க. நாம வீட்லயோ இல்ல நணபர்களோட பேசுற விசயத்துக்கு **Facebook,**

**Instagram**-ல விளம்பரம் வருது. இப்படி டிஜிட்டல் விளம்பரங்களோட தொல்லை நாளுக்கு நாள் அதிகரிச்சிட்டே வருது.

இந்த டிஜிட்டல் விளம்பரங்கள் ஏதோ எரிச்சல் தரக்கூடிய விசயம் மட்டுமல்ல. இதுக்கு பின்னாடி பெரிய ஆபத்தும் இருக்கு. விளம்பரம்-னா விக்குற பொருட்கள பத்தின விளம்பரம் மட்டுமில்ல, காசு வாங்கிட்டு ப்ரோமோட் பண்ற எல்லாமே விளம்பரம் தான். குறிப்பா இன்னைக்கு சோஷியல் மீடியாவுல **influencing கலாச்சாரம்** அதிகரிச்சிருக்கு.

தங்கள **Social Media Influencers**-னு சிலர் வெளிப்படையாவே அறிவிச்சுக்குற போக்கையும் பாக்க முடியுது. Influencers-ன் வேலை ஒரு கருத்தை மக்கள் மத்தியில் வேரூன்ற செய்வது அல்லது ஏதாவது ஒரு செயலை செய்ய தூண்டுவது. அந்தக் கருத்தோ செயலோ சமூகத்துக்கு நல்லது

செய்யுதா இல்ல ஒரு சிலரோட லாபத்துக்காக பலரை பாதிக்குதாங்குறத வச்சுதான் அத மதிப்பிட முடியும்.

உதாரணத்துக்கு, பரப்பரப்பான செய்திய பத்தி ஒரு கருத்த உருவாக்குறது, போலி செய்தி பரப்புரது, இதுல முதலீடு பண்ணுங்க அதுல முதலீடு பண்ணுங்கனு தங்களோட லாபத்திற்காகவோ மக்கள்ட இருந்து பணத்த கரக்குறது, பூனைய புலியா காமிக்குறது, புலிய எலியா ஆக்குறதுனு மக்கள் முட்டாளக்கி ஆதாயமடையுறது.

விளம்பரங்கள் ஒன்னும் புதுசில்லையே! ரேடியோ, டிவி, சுவரொட்டி, நாளிதழ்னு எல்லாத்துலையும் தான் விளம்பரம் வருது. டிஜிட்டல் விளம்பரத்துல மட்டும் என்ன பிரச்சனை?

உங்க மைன்ட் வாய்ஸ் கேக்குது. ரேடியோ,

டிவி, சுவரொட்டி, நாளிதழ் இது எல்லாத்துலயும் வர விளம்பரம் பொதுவான விளம்பரம். அதாவது எல்லாரும் ஒரே விளம்பரத்த தான் பாப்போம். ஆனா டிஜிட்டல் ஊடகத்துல வர விளம்பரம் ஆள்பாத்து காட்டப்படுது. எல்லோரும் ஒரே விளம்பரத்த பாக்குறதில்ல.

ஒருத்தர பத்தி தகவல்கள சேமிச்சு அதுக்கேத்தா மாதிரி விளம்பரத்தையோ இல்ல கருத்தையோ புகுத்துறதுதான் டிஜிட்டல் தளங்கள்ல இருக்குற மிகப்பெரிய பிரச்சனை. Facebook Insta-ல அடுத்து என்ன பதிவு உங்களுக்கு வரப்போகுதுனு யாரு முடிவு பண்றாங்க? அது ஒரு வணிக விளம்பரமா இருக்கலாம், இல்ல நீங்கள் பின்தொடரும் ஒருவருடைய பதிவா இருக்கலாம், இல்ல பணம் கொடுத்து ஊதிப் பெருக்கப்படும் “**Sponsored**” அல்லது “**Promoted**” பதிவா இருக்கலாம். நீங்க பின்தொடரும் ஒருவருடைய பதிவை தவிர

மற்ற அனைத்துமே திட்டமிட்டு திணிக்கப்பட்ட கருத்து தான். பிரபலங்களின் பதிவுகள் உட்பட.

பணபலம் அதிகம் கொண்டவர்கள் தங்கள் லாபத்திற்காக சமூகத்தின் போக்கை சிந்தனையை இதன் மூலம் கடத்திடவோ, மடைமாற்றவோ, மழுங்கடிக்கவோ முடியும். அதற்கான அனைத்து வழிமுறைகளையும் Facebook, Insta, Youtube போன்ற தனியுடைமை மென்பொருட்கள் வழங்குகிறது. இது குறித்து ஆங்கிலத்தில் **"The Great Hack", "The Social Dilemma"** போன்ற ஆவணப்படங்கள் வெளியாகியுள்ளது.

இந்த மென்பொருட்கள் நம்மை பற்றி நிறைய தெரிந்துக்கொள்வதன் மூலமே நம்மை விளம்பரதாரர்களுக்கு காட்டிக்கொடுக்கின்றன. யாரிடம் எப்போது எப்படி நம்மை நாம் வெளிப்படுத்திக் கொள்ள வேண்டும் என்கிற

முடிவை நிஜ வாழ்வில் நாமே எடுக்கிறோம். ஆனால் இந்த மென்பொருட்கள் சூழ் உலகில் நம்மை பல்வேறு வழிகளில் வணிக நிறுவனங்கள் ஆன்லைனில் பின்தொடர்ந்து நம்மைப் பற்றிய நுண்ணிய தகவல்களைக் கூட சேமித்து வைக்கின்றன.

உதாரணத்திற்கு, உங்கள் ஃபோனில் வேறு என்னனென்ன செயலிகளெல்லாம் நீங்கள் பயன்படுத்துகிறீர்கள், அவற்றை எப்போது திறந்தீர்கள், எப்போது மூடினீர்கள், என்ன சிம் பயன்படுத்துகிறீர்கள், என்ன வலைதளங்களை பார்க்கிறீர்கள் போன்ற விவரங்களையெல்லாம் Facebook போன்ற நிறுவனங்கள் உங்களுக்கு தெரியாமலேயே உங்கள் ஃபோனிலிருந்து சேமிக்கிறது. நான் சொல்வதை நம்ப வேண்டாம். நீங்கள் உங்கள் Facebook செயலியை திறந்து அதில் Settings உள்ளே **“Off Facebook Activity”** என்ற

பக்கத்திற்கு சென்று பாருங்கள்.

**ஆன்லைன் சூதாட்ட** செயலிகள்ல பணத்த போட்டு ஏமாறுவதும், **உடனடி சிறுகடன்** வழங்குற செயலிகள்ல பத்தாயிரம், இருவதாயிரம் கடன் வாங்கிட்டு அதை வட்டியோட திருப்பி கொடுக்குறதுகுள்ள அவரை ஆபாசமா சித்தரிப்பதும் அதை

சொந்தங்கள், நண்பர்கள், கூட வேலை பாக்குறவங்கனு எல்லாருக்கும் அனுப்பிருவோம்னு பயமுறுத்தி அதனால தற்கொலை செய்து கொண்டவர்களோட எண்ணிக்கையும் சமீபத்துல அதிகமாகிருக்கு. கடன் வாங்க ஒரு செயலிய நிறுவுனா, அந்த செயலி உங்க ஃபோன்ல இருந்து எல்லாரோட ஃபோன் நம்பர எடுத்துக்குது.

இப்படி பல செயலிகளுக்கு நம் ஃபோனில்

இடமளித்து நாமே அவர்களுக்கு கதவுகளை திறந்து விடுகிறோம்.

உங்களைப் பற்றி உங்கள் சுற்றத்திற்கும், நட்பிற்கும் தெரிவதைவிட பலமடங்கு இந்த நிறுவனங்களுக்கு தெரிகிறது. இதிலிருந்து நாம் எப்படி நம்மையும் நம் அன்புக்குரியவர்களையும் தற்காத்துக் கொள்ளப்போகிறோம்?

# 2. எப்படி தற்காத்துக்கொள்வது ?

நம்மை தற்காத்துக்கொள்ள இரண்டு வழிகள் உள்ளன. இரண்டுமே முக்கியத்துவம் வாய்ந்தவை.

ஸ்மார்ட்ஃபோன் பயன்பாடும் இணைய பயன்பாடும் அதிகரிக்கும் போது அதனால் ஏற்படும் தீங்குகளை கட்டுப்படுத்த, குறைக்க வெகுமக்களை இவற்றிலிருந்து பாதுகாக்க வலுவான சட்டங்களும் ஒழுங்குபடுத்தும் முறைகளையும் கொண்டுவர வேண்டியது அரசின் கடமை.

அனைவருக்குமான பாதுகாப்பு என்பது சட்ட முறைப்படியும் அதனை கராராக அமல்படுத்துவதிலும் தான்

அடங்கியுள்ளது. எனவே அரசுக்கு இதனை நாம் தொடர்ந்து வலியுறுத்த வேண்டியுள்ள அதே நேரத்தில், அதுவரை நாமும் நம்மை எப்படி தற்காத்துக்கொள்வது என்பதையும் தெரிந்து வைத்திருக்க வேண்டும்.

நம்முடைய சாதனங்களை பயன்படுத்தியே நம்மை உளவு பார்க்கும் இந்த ஏற்பாட்டை புரிந்துக்கொண்டால் தான் நாம் நம்மை எப்படி தற்காத்துக்கொள்வது என்பதை தேர்ந்தெடுக்க முடியும்.

அவ்வாறு அறிந்துக்கொள்வதற்கும், தற்காத்துக்கொள்வதற்கும் பயன்படும் செயலிகள் மற்றும் மென்பொருட்களை இங்கே அறிமுகப்படுத்துகிறோம்.

**குறிப்பு**: இங்கு அறிமுகப்படுத்தப்படும் அனைத்து மென்பொருட்களும் கட்டற்ற

மென்பொருட்கள் மட்டுமே என்பதை குறிப்பிட விரும்புகிறோம். தனியுரிமை மென்பொருட்கள் (proprietary softwares) போல் அல்லாது கட்டற்ற மென்பொருட்கள் (Free & Open Source Software) வெளிப்படைத் தன்மைக் கொண்டது எனவே நம்பகத்தன்மை கொண்டதும் கூட.

# 3. ஸ்மார்ட் ஃபோன் செயலிகள் (Apps for Smartphone)

**குறிப்பு** : இங்கு பட்டியலிடப்படும் செயலிகள் அனைத்தும் ஆன்ட்ராய்ட் (Android) ஸ்மார்ட்ஃபோன்களுக்கானது. நீங்கள் ஐ-ஃபோன் பயன்படுத்துபவராக இருந்தால் இதில் ஒருசில செயலிகள் ஐ-ஃபோனுக்கும் இருக்கலாம்.

**1. F-Droid**

ஆன்ட்ராய்டு இயங்குதளம் கூகுள் நிறுவனத்தின் கட்டுப்பாட்டில் இருப்பதால் பெரும்பாலும் நாம் வாங்கும் இந்த ஆன்ட்ராய்டு ஃபோன்களில் கூகுள் நிறுவனத்தின் செயலிகள் பதிந்தே வரும். அதில் குறிப்பாக “Google Play Store” என்னும் செயலி மூலமே நாம் அதில் கிடைக்கும்

செயலிகளை நம் ஃபோனில் பதிந்துக்கொள்ள முடியும். அதற்கு கூகுள் நிறுவனத்திடம் நாம் கணக்கு ஒன்றையும் உருவாக்கி வைத்திருக்க வேண்டும்.

Google Play Store என்பது ஆன்ட்ராய்டு செயலிகளுக்கான சந்தை. இங்கு அனைத்துவிதமான செயலிகளும் கலந்திருக்கும். இலவச செயலிகள், கட்டணச் செயலிகள், தனியுரிமை செயலிகள், கட்டற்ற செயலிகள் என அனைத்துமே இருக்கும்.

இது கூகுள் நிறுவனத்தாலே இயக்கப்படும் செயலிகளுக்கான சந்தை என்பதால் எந்த செயலிகளை அனுமதிக்க வேண்டும், அனுமத்திக்கக் கூடாது என்ற அதிகாரம் அந்நிறுவனத்திடம் உள்ளது.

F-Droid என்பது கட்டற்ற ஆன்ட்ராய்ட்

செயலிகளுக்கான ஒரு இலவச சந்தை. இங்கு கட்டற்ற செயலிகள் மட்டுமே கிடைக்கும். நாம் இனி காணவிருக்கும் தற்காப்பு செயலிகளை உங்கள் ஃபோனில் பதிந்து பயன்படுத்த F-Droid நிச்சயம் தேவை. ஏனெனில் இவற்றில் பல செயலிகளை கூகுள் நிறுவனம் தங்களுடைய சந்தையில் அனுமதிக்கவில்லை .

ஆன்ட்ராய்டு இயங்குதளத்தின் மீதான தங்கள் அதிகாரத்தையும், சந்தையில் கூகுள் நிறுவனத்திற்கு உள்ள ஏகபோக இடத்தையும் தக்கவைத்துக்கொள்ள இதுபோன்ற சர்வாதிகார போக்குகளில் கூகுள் நிறுவனம் ஈடுபடுகிறது.

Play Store-ல் F-Droid-ஐ தேடினால் கிடைக்காது. எனவே F droid-ஐ அதன் அதிகாரப்பூர்வ வலைதளத்திற்கு சென்று தான் பதிவிறக்க வேண்டும்.

அதிகாரப்பூர்வ வலைதளம் : https://f-droid.org

…

1. மேற்கண்ட வலைதளத்திற்கு சென்று "**Download**" செய்துகொள்ளுங்கள்.

2. **PlayStore**-க்கு வெளியே ஏதாவது செயலியை

நாம் ஃபோனில் நிறுவ வேண்டுமென்றால், அதற்கு அதை முதலில் நாம் அனுமதிக்க வேண்டும்.

3. Download செய்யப்பட்ட செயலியின் “**.apk**” ஃபைலை தொட்டால் வரும் செய்தியை படித்துவிட்டு, “**Settings**” என்பதை தேர்வு செய்யுங்கள்.

4. இதில் “**Allow apps from this source**” என்ப தை தேர்வு செய்து பின் back பட்டனை தொட்டால், ” **Install**” செய்யலாம்.

5. F-Droid பதிந்த உடன் அதனை திறந்தவுடன் “**updating repositories**” என்று வரும். அப்படி வரவில்லையென்றால் காலியான இடத்தை தொட்டு மேலிருந்து கீழ் இழுத்து விட்டால் செயலிகளின் பட்டியலை அப்டேட் செய்து 1 நிமிடத்திற்குள் திரையில் பட்டியல் தோன்றும்.

## 2. QR & Barcode Scanner

ஏற்கனவே ஏதேனும் ஒரு QR_Scanner செயலியை பயன்படுத்துகிறீர்கள் என்றால் அடுத்த பகுதிக்கு சென்று விடுங்கள்.

நாம் அடுத்தடுத்து காணப்போகும் செயலிகளை நிறுவ இது தேவைப்படும். எனவே ஒரு QR Scanner செயலி இருப்பது அவசியமாகிறது.

இந்தியாவில் UPI அறிமுகப்படுத்தப்பட்ட பிறகு பலரும் பல செயலிகளை பயன்படுத்தி கையில் பணமாக கொடுப்பதற்கு பதிலாக, செயலிகள் மூலம் ஒரு படத்தை scan செய்து பணம் செலுத்தும் முறை பரவலாகியுள்ளது.

Scan செய்யும் அந்த கருப்பு வெள்ளை குறியீடுகள் கொண்ட படம் தான் QR Code. நாம் பிறருடன் பகிர விரும்பும் தகவல் தான் அந்த குறீயீட்டு முறையில் புதிய வடிவம் பெற்றுள்ளது.

அத்தகவல் ஒரு வலைதள முகவரியாக இருக்கலாம், கைபேசி எண்ணாக இருக்கலாம், எழுத்துக்களால் பகிரும் எந்த தகவலாக வேண்டுமானாலும் இருக்கலாம்.

1. F-Droid-ஐ திறந்து கொள்ளுங்கள்.
2. அதில் கீழே வலதுபுறம் உள்ள தேடல் பட்டனை தொடுங்கள்.
3. அதில் **QR & Barcode Scanner** என்று டைப் செய்யுங்கள். நீங்கள் டைப் செய்த அதே பெயரில் உள்ள செயலியை தொட்டு உள்ளே சென்று “Install” என்று தொட்டு இச்செயலியை உங்கள் ஃபோனில் பதிந்துக்கொள்ளுங்கள்.

**குறிப்பு**: F-Droid செயலியை நாம் எப்படி Play Store-க்கு வெளியிலிருந்து பதிவிறக்கம் செய்தோமோ அதே போல தான் இதுவும்.

F-droid -லிருந்து பதிவிறக்கும் செய்வதும் ஆன்ட்ராய்டை பொறுத்த வரையில் PlayStore-க்கு வெளியிலிருந்து பெறுவது தான். எனவே முதல் முறை ஒரு செயலியை F-Droid -லிருந்து பதிவிறக்கம் செய்யும் போதும், இதை அனுமதிக்கிறீர்களா என்று ஆன்ட்ராய்டு இயங்குதளம் கேட்கும்.

சென்ற பகுதியில் F-droid செயலியை பதியும் போது எப்படி “Settings” சென்று “Allow apps from this source” கொடுத்துவிட்டு Back பட்டனை தொட்டு வந்தீர்களோ அதேபோல் இம்முறையும் செய்ய வேண்டும்.

இது ஒரேயொருமுறை மட்டுமே தேவைப்படும். ஒருமுறை “Allow apps from source” என்று F-Droid க்கு சொல்லிவிட்டால் அடுத்தடுத்த செயலிகளை பதிவிறக்கம் செய்ய ஆன்ட்ராய்டு இதை கேட்காது.

### 3. Blokada

விளம்பரங்கள் மற்றும் உளவான்களிடமிருந்து (trackers) உங்களை தற்காத்துக்கொள்ள முக்கியமான செயலி இந்த Blokada. இது ஒரு பாதுகாப்பு கேடயம் (shield).

இது என்ன செய்யும்? ஒன்றுமே தெரியாதது போல உங்கள் கைகளில் இருக்கும் ஸ்மார்ட்ஃபோன் பின்னணியில் எந்தெந்த இணையதளத்துடன் தொடர்புகொள்கிறது என்று உங்கள் கண்முன் கொண்டுவந்து காட்டும்.

நம் கண்களுக்கு புலப்படாமல் இருந்தவை தற்போது நம் கண் முன்னே பட்டியலிடப்படும். இது எவ்வளவு பெரிய முன்னேற்றம்! நான் ஏற்கனவே கூறியது போல, நம்மிடமிருந்து எப்படி எடுக்கப்படுகிறது என்பது தெரிந்தால் தான் அதை தடுப்பதைப் பற்றி சிந்திக்க முடியும்.

எந்தெந்த வலைதள முகவரியெல்லாம் விளம்பரம் சார்ந்தவை, எவையெல்லாம் உளவு பார்ப்பவை என்று பெரிய பட்டியலை பல்வேறு நபர்கள் உருவாக்கி இணையத்தில் பகிர்ந்துள்ளனர். இப்படியல்கள் Blokada செயலியுடன் சேர்ந்தே நமக்கு கிடைக்கிறது.

இதில் தேவைப்படும் பட்டியலை நாம் தேர்ந்தெடுத்துக் கொண்டால் போதும், Blokada அந்த வலைதளங்களிலிருந்து நம் ஃபோனை பாதுகாக்கும். இதனால் பெருவாரியான

விளம்பரங்கள் குறையும், உளவான்கள் நம் ஃபோனிலிருந்து தகவல்களை அவர்கள் தளத்திற்கு பதிவேற்றும் முயற்சி அங்கேயே முடக்கப்படும்.

**Blokada-வை Install செய்ய**

1. **F-Droid**-ஐ திறந்து கொள்ளுங்கள்.

2. கீழே வலதுபுறம் உள்ள **தேடல் பட்டனை** தொடுங்கள்.

3. " **Blokada**" என்று டைப் செய்து தேடுங்கள்.

4. " **Blokada 5"** செயலியை தேர்வு செய்து"**Install**" செய்துகொள்ளுங்கள்.

**Blokada-வை பயன்படுத்துவது எப்படி?**

1. **Blokada**-வை திறந்து கொள்ளுங்கள்.

2. **Blokada**-வை செயல்படுத்தும் முன் மேற்கண்ட வலைதளங்கள் கொண்ட பட்டியல்களை நாம் தேர்ந்தெடுத்து விடுவோம்.

3. கீழே மூன்றாவதாக பெட்டிபோல உள்ள பட்டனை தொடவும். அதில் "**Blocklists**" தேர்வு செய்யவும்.

4. இதில் "ALL" என்ற பக்கத்திற்கு சென்று ஒருசிலவற்றை தேர்வு செய்யுங்கள். பின்



Goodbye Ads

Alternative blocklist with advanced features





AdAway

Adblocking for your mobile device





Phishing Army

Protects against cyber attacks



   Advanced 

…

மீண்டும் கீழே கேடயம் போலுள்ள முதல் பக்கத்திற்கு வரவும்.

5. இங்கே நடுவில் உள்ள ஒரு பெரிய பவர் பட்டனை அழுத்தினால் Blokada-வை செயல்படுத்தலாம்.



Tap to activate

...

6. “**Just one more step**” என்று வருவதில் “Continue”

தேர்வு செய்யவும்.

7. “Allow Blokada 5 to create a VPN connection” 6TTM தோன்றும் திரையில் “Always Allow” என்பதை தேர்வு செய்யவும்.

8. தேர்வு செய்த பின் “Blokada is Active!” என்றசெய்திவரும். ” Continue” கொடுத்துவிட்டு வெளியே வரவும்.

Blokada பின்னணியில் செயல்பட்டுக் கொண்டிருக்கும். இதன் குறியீடாக மேலே **Notification** பகுதியில் ஒரு சில ஃபோன்களில் “**சாவி**” சின்னமும், சில ஃபோன்களில் **உலக உருண்டை போல VPN** என்றும் இருக்கும்.

Blokada செயல்படுவதை உறுதிப்படுத்திக்கொள்ள **Notification** பகுதியை கீழே இழுத்துப் பாத்தால் “**Blokada. Active - Protection: Medium**” போன்று இருக்கும்.

## Just one more step

Blokada is using a VPN Configuration to
block ads. You will be asked to allow it i
the next step.

Learn more

CONTINUE

...

Allow "Blokada 5" to create a VPN connection?

Please do not allow this request if you do n this app, otherwise you may be at risk of ne monitoring and malicious data theft.


Do Not Ask Again Once Declined

Deny | Always A

...



**Blokada is Active!**

A blue or orange ring means that Bloka
is working.

We recommend you activate Always o
VPN in your system settings.

...

இவையெல்லாம் Blokada பின்னணியில் நமக்கு கேடயமாக செயல்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதை காட்டுகிறது.

வழக்கம்போல் உங்கள் ஃபோனை சிறிது நேரம் பயன்படுத்திவிட்டு மீண்டும்

Blokada-வை திறந்து உள்ளே வந்து பாருங்கள். " **Blocked 100 ads & trackers**" போன்று எத்தனை விளம்பரங்கள் மற்றும் உளவான்களை தடுத்து நிறுத்தியிருக்கிறது என்று காட்டும்.

உங்கள் ஃபோன் நொடிக்கு நொடி எந்தெந்த வலைதளங்களை தொடர்பு கொள்கிறது என்கிற நிகழ்நேர பட்டியலை பார்க்க, Blokada வை திறந்து இரண்டாவதாக

உள்ள "Activity" பகுதிக்கு சென்று காணலாம்.

**கேள்வி**: Blokada செயல்பட்டாலும் ஒரு சில




azwus2-client-s.gateway.messenger.live.

15 minutes ago

allowed 6 times




app-measurement.com

20 minutes ago

blocked 8 times




conf-in.dc.heytapmobi.com

20 minutes ago

blocked 2 times




omes-sec.heytapmobile.com

30 minutes ago

blocked 11 times




dragate-in-dc.heytapmobile.com

31 minutes ago

blocked 26 times

Activity

செயலிகளில் விளம்பரங்கள் வருகிறதே?

**பதில்**: ஒரு சில செயலிகள், உதாரணத்திற்கு Youtube போன்ற செயலிகள் விளம்பரங்களை நமக்கு தேவைப்படும் வீடியோக்களுடன் சேர்த்து Encrypt செய்து திணிக்கிறது. Blokada மூலம் இதனை தடுக்க முடியாது.

விளம்பரங்களை தடுப்பது எப்படி என்று நம்மைப் போன்றோர் யோசித்து சில வழிமுறைகளை உருவாக்கினால், அதனை முறியடித்து மீண்டும் எப்படி விளம்பரங்களை திணிப்பது என்று இப்பெருநிறுவனங்களும் முயற்சித்து வருவதன் விளைவே இதுபோன்ற புதிய வழிகளில் விளம்பரங்கள் தொடர்ந்து வருவது.

**கேள்வி**: Blokada VPN இணைப்பை உருவாக்கிறதே. இது என் ஃபோனுடைய இணைய

போக்குவரத்தை வேறு ஏதாவது VPN சர்வர் மூலம் அனுப்புகிறதா?

**பதில்**: இல்லை. VPN இணைப்பு உங்கள் ஃபோனிலேயே உருவாக்கப்பட்டு அதுவே சர்வராக செயல்படுகிறது. இதனால் உங்கள் ஃபோனில் இணைய போக்குவரத்து உங்கள் ஃபோனுக்கு வெளியே வேறு VPN சர்வர்கள் மூலம் செல்லவில்லை.

### 3. NewPipe

YouTube போன்ற செயலிகளில் வரும் விளம்பரங்களை Blokada-வால் தடுக்க முடியாது என்றால் வேறு எப்படி விளம்பரங்கள் இல்லாமல் YouTube-ஐ பயன்படுத்துவது?

YouTube செயலியை கொஞ்சம் ஓரம்கட்டிவிட்டு NewPipe செயலியை பயன்படுத்துவோம்.

YouTube-ஐ விளம்பரங்கள் இல்லாமலும், கூகுள் கணக்கு இல்லாமலும் பயன்படுத்த இது ஒரு மிகச் சிறந்த செயலி. முதலில் இதனை நம் ஃபோனில் Install செய்வது எப்படி என்று பார்ப்போம்.

இந்த QR Code-ஐ QR Code & Scanner செயலியை திறந்து ஸ்கேன் செய்யுங்கள். பின்னர் கீழே உள்ள வழிமுறைகளை பின்பற்றுங்கள்.

1. ஸ்கேன் செய்த பின் “copy to clipboard” என்பதை தேர்வு செய்துவிட்டு வெளியே வந்துவிடுங்கள்.
2. இப்போது F-Droid செயலியை திறந்து, அதில் கீழே கடைசியாக உள்ள “Setting” தேர்வு செய்யவும்.
3. இதில் “Repositories” என்பதை தேர்வு செய்யவும். வரும் திரையில் மேலே உள்ள + தொடவும்.

23.09.2022 12:53

https://archive.newpipe.net/fdroid/repo/
?fingerprint=E2402C78F9B97C6C89E97DB91
2751FDA1D02FE2039CC0897A462BDB57E7



Open link



Share as text



Copy to clipboard



Search on the web

...

4. நீங்கள் ஸ்கேன் செய்து நகலெடுத்த தகவல் இப்போது இங்கே தானாக பூர்த்தி செய்யப்பட்டிருக்கும்.” ADD” கொடுத்துவிட்டு கீழே “Latest” பகுதிக்கு வரவும்.

5. ஒருமுறை மேலிருந்து கீழே இழுத்து செயலிகளின் பட்டியலை புதுப்பித்துக் கொண்டு, வலதுபுறம் கீழே உள்ள **Search** பட்டனை தொடவும்.

6. இங்கே “**NewPipe**” என்று டைப் செய்யுங்கள். நீங்கள் **பழைய ஆன்ட்ராய்டு ஃபோன்** வைத்திருந்தால் ’**Newpipe Legacy**” பதிந்துக்கொள்ளவும். இல்லையென்றால், NewPipe செயலியை பதிந்துக்கொள்ளவும்.

**NewPipe பயன்படுத்துவது எப்படி?**

1. NewPipe செயலியை திறந்து கொள்ளுங்கள்.

2. **மேலே இடது ஓரத்தில்** உள்ள மூன்று கோடுகள் கொண்ட பட்டனை தொடவும்.

3. இடதுபுறத்திலிருந்து தோன்றும் திரையில் “**Settings**” தேர்வு செய்யுங்கள்.

4. இதில் “**Content**” தேர்வு செய்து மொழியை தமிழுக்கும், நாட்டை **இந்தியாவிற்கும்** மாற்றுங்கள். அப்போது தான் இந்தியாவில் **ட்ரென்ட்** ஆகும் வீடியோக்களும், தமிழ் மொழி வீடியோக்களும் நமக்கு முதல் பக்கதில் கிடைக்கும்.

5. ஒருமுறை NeuPipe-ஐ முழுவதுமாக மூடி மீண்டும் திறக்கவும்.

6. இப்போது நீங்கள் விரும்பும் சேனல் பெயரையோ அல்லது பார்க்க விரும்ப்பும் வீடியோவின் தலைப்பை கொடுத்து தேடி விளம்பரங்கள் இல்லாமல் பார்த்து மகிழலாம்.



Content

App language

English

Default content language

தமிழ்

Default content country

India

7. இதில் இன்னும் சிறப்பம்சம் என்னவென்றால் **YouTube Premium** என்னும் காசு கொடுத்து பதிய வேண்டிய செயலியில் இருக்கும் அம்சங்கள் இதில் நமக்கு **இலவசமாகவே கிடைக்கிறது.**

8. வீடியோக்களை பதிவிறக்கம் செய்தல், வீடியோவை நிறுத்திவிட்டு வெறும் ஆடியோவை மட்டும் கேட்பது போன்றவை.

9. நீங்கள் எல்லா சேனலுக்கும் Subscribe செய்யலாம், இவை அனைத்தும் உங்கள் ஃபோனிலேயே வைக்கப்படும். YouTube சர்வருக்கு நீங்கள் யாரென்றும், எந்தெந்த சேனல்களை பின்தொடர்கிறீர்கள் என்றும் தெரியாது.

### 4. Firefox for Android

உங்கள் ஃபோனில் கூகுள் க்ரோம், ஒபேரா

போன்ற browser களை தவிர்த்து Firefox-ஐ பயன்படுத்துவது பாதுகாப்பானது.

இதை PlayStore லிருந்தே பதிவிறக்கம் செய்து பயன்படுத்துங்கள். இதில் குறிப்பாக “**Reader Mode**” கட்டுரைகளை, செய்திகளை எவ்வித கவனச்சிதறலும் இல்லாமல் படிக்க உதவுகிறது.

**5. Searx**

…

நேரடியாக கூகுளில் நீங்கள் தேடினால், நீங்கள் யாரென்றும் எதைப்பற்றி தேடுகிறீர்கள் என்ற தகவல் அந்நிறுவனத்திற்கு தெரிகிறது. ஒரு சிலர் **DuckDuckGo** தேடுபொறியை (Search Engine) பயன்படுத்துகின்ற்னர். இன்னும் சிலர் **Bing** போன்றதை பயன்படுத்துகின்றனர்.

இத்தேடுபொறிகளின் விடைகள் பயனுள்ளவை தான் அதே சமயம் தேடுபொறிகளிடம் நாம் நம் அடையாளத்தையும் கொடுக்கிறோம். நம்மைப் பற்றி இதுமூலம் அவர்கள் சேகரிக்கும் தரவுகள் மீண்டும் விளம்பரங்கள் வடிவில் நம்மை துரத்துகின்றன.

இந்த தேடுபொறிகளின் விடைகளும் வேண்டும், அதே சமயம் நமது **Privacy**-யும் இவர்களிடமிருந்து பாதுகாக்கப்பட வேண்டும். இதற்காகவே உருவாக்கப்பட்டது தான் **SearX**

என்னும் **meta search engine**. அதாவது. இதுவே ஒரு search engine கிடையாது. ஆனால் நமக்காக பிற Search Engine-களில் தேடி அனைத்து விடைகளையும் நமக்கு வழங்குகிறது.

இதன் மூலம் ஒரே நேரத்தில் பல்வேறு தேடுபொறிகளிடமிருந்து ஒரே இடத்தில் நாம் விடைகளை பெற முடிகிறது.

இது ஒரு கட்டற்ற வலைதள மென்பொருள். இதனை Free Software Foundation Tamil Nadu (FS-FTN) மற்றும் Free Software & Hardware Movement of Puducherry (FSHMP) என இருக்குழுக்களுமே நமது சர்வர்களில் நிறுவி பொதுமக்களின் பயன்பாட்டுக்காக இயக்கி வருகிறோம். பயன்படுத்திக் கொள்ளுங்கள்.

1. https://search.fsftn.org
2. https://search.fshm.org

மேற்கண்ட வலைதளத்திற்கு சென்று உங்கள் தேடலை துவங்கலாம்.

# 4. (மடிக்)கணினி மென்பொருட்கள் (Apps for Laptop/PCS)

## 1. Firefox

உங்கள் கணினியிலும் Google Chrome / Chromium காட்டிலும் நாம் **Mozilla Firefox** இணைய உலாவியை (web browser) பயன்படுத்த வலியுறுத்துகிறோம். இதற்கு பல காரணங்கள் உள்ளன.

கூகுள் நிறுவனம் தனது உலாவியான க்ரோமிலும் பல கட்டுப்பாடுகளை கொண்டு வந்துள்ளது. இதனால் பல்வேறு Web Extension-கள் முழுமையாக வேலை செய்யாது. குறிப்பாக

விளம்பரம் மற்றும் ட்ராக்கர்களை கட்டுப்படுத்தும் Web-Extension-களளை குறிவைத்தே இந்த கட்டுப்பாடுகளை கொண்டு வந்துள்ளது.

அதோடு Firefox மட்டுமே வெளிப்படைத் தன்மையுடன் இயங்கும் கட்டற்ற மென்பொருள்.

**2. uBlock Origin (Addon)**

மேலே குறிப்பிட்டது போல இது ஒரு Web Extension. அல்ல து Firefox-ல் இதை Addon என்று கூறுவார்கள். Firefox மூலம் நீங்கள் செல்லும் அனைத்து வலைதளத்திலும் உள்ள விளம்பரங்கள் மற்றும் ட்ராக்கர்களை முடக்கிவிடும்.

YouTube வீடியோ உட்பட பல்வேறு தளங்களில் விளம்ப்ரங்கள் முற்றிலுமாக தடுக்கப்படும்.

1. **Firefox**-ஐ திறந்து கொள்ளுங்கள்.
2. அதில் https://addons.mozilla.org

வலைதளத்திற்கு சென்று “uBlock Origin” என்று தேடி இதனை பதிந்துக்கொள்ளுங்கள்.

### 3. SponsorBlock (Addon)

இதுவும் ஒரு Firefox Addon தான். ஒரு **YouTube வீடியோவில்** எந்தெந்த இடத்தில் விளம்பரதாரகள் பற்றி பேசுகிறார்களோ, **promoted content** எங்கெல்லாம் வருகிறதோ அதையெல்லாம் **skip செய்துவிடுகிறது.**

இந்த மென்பொருளுக்கு எதெல்லாம் promoted content என்று தெரியாது. இந்த addon-ஐ பயன்படுத்தும் எவரும் ஒரு

வீடியோவில் எவையெல்லாம் promoted content என்று இந்த addon-ஐ வைத்தே சமர்ப்பிக்கலாம்.

இதுபோல் பலர் சமர்பிக்கிறார்கள். இவ்வாறு தான் இந்த addon promoted content-ஐ சரியாக skip

செய்கிறது. பயன்படுத்தி பாருங்கள். உங்களுக்கே வித்தியாசம் தெரியும்.

1. Firefox-ஐ திறந்து கொள்ளுங்கள்.
2. அதில் https://addons.mozilla.org வலைதளத்திற்குசென்று “**SponsorBlock**” என்று தேடி இதனை பதிந்துக்கொள்ளுங்கள்.

# 5. ஸ்மார்ட் டிவி செயலிகள் (Apps for SmartTVs)

இன்றையல் நிலையில் இந்த ஸ்மார்ட் டிவிக்களில் தான் பலவற்றை மாற்ற முடியாத சூழ்நிலைக்கு தள்ளப்பட்டிருக்கிறோம்.

ஸ்மார்ட்ஃபோன்கள் போல, ஸ்மார்ட் டிவிக்களும் பல்வேறு இயங்குதளங்குடன் வருகின்றன. இதிலும் நாம் ஆன்ட்ராய்டு இயங்குதளத்தில் இயங்கக் கூடிய ஸ்மார்ட் டிவியை மட்டுமே பார்ப்போம்.

ஸ்மார்ட் டிவியை பொறுத்த வரையில் Blokada பெரிதாக கைகொடுக்காது. எனவே இதைப் பொறுத்தவரை YouTube வீடியோக்களை விளம்பரம் இல்லாமல் பார்ப்பதை மட்டும் எடுத்துக்

கொள்வோம்.

## 1. NewPipe

Smartphone-ல் நமக்கு Firefox அல்லது Chrome போன்ற web browser-கள் இயல்பாக இருக்கும், எனவே அதனை வைத்து F droid தளத்திற்கு சென்று பதிவிறக்கம் செய்துவிடலாம். ஆனால் டிவியில் அப்படி எதுவும் இருப்பதில்லை .

ஒருசில டிவிக்களில் Debugging Mode வழியாக செயலிகளை ஃபோனிலிருந்தோ அல்லது கணினி வழியாக பதியலாம். ஆனால் இவ்வழிமுறை அனைத்து ஆன்ட்ராய்ட் டிவிக்களிலும் சாத்தியமில்லை.

**NewPipe** செயலி ஆன்ட்ராய்டு டிவிக்களில் வேலை செய்கிறது ஆனால் இன்னும் மேம்படுத்த வேண்டியுள்ளது.

ஆன்ட்ராய்டு டிவியில் **PlayStore** இருக்கும். இதில் உங்கள் கூகுள் கணக்கின் மூலம் லாகின் செய்து, “**Send files to Tv**” என்ற செயலியை டிவியில் நிறுவுங்கள். இதே போல் இச்செயலியை உங்கள் ஸ்மார்ட்போனிலும் நிறுவுங்கள்.

இப்போது உங்கள் ஃபோனில் NewPipe (https://newpipe.net) தளத்திற்கு சென்று apk file-ஐ பதிவிறக்கம் செய்து, ” Send Files To TV” செயலி வழியாக உங்கள் டிவிக்கு அனுப்பலாம்.

உங்கள் ஃபோனும், டிவியும் ஒரே Wi-Fi நெட்வொர்க்கில் இருக்க வேண்டும். இரண்டிலும் “Send Files To Tv” செயலியை திறந்துக் கொள்ளுங்கள்.

ஃபோனில் “Send” என்றும், டிவியில் “Receive” என்றும் தேர்வு செய்யவும். ஃபோனிலிருந்து Ne-uPipe apk file-ஐ டிவிக்கு அனுப்புங்கள். டிவியில்

இந்த file பெறப்பட்டிருப்பதை நீங்கள் பார்க்கலாம். அதை டிவியில் திறக்க முயற்சியுங்கள்.

**Settings** சென்று "**Allow apps from this source**" தேர்வு செய்து பின் NewPipe-ஐ டிவியில் நிறுவி பயன்படுத்தலாம்.

**2. SmartTubeNext**

NewPipe-ஐ விட சிறப்பாக செயல்படும் மற்றொரு கட்டற்ற மென்பொருள் செயலிதான் இந்த SmartTubeNext செயலி.

இது டிவிக்கென்று பிரத்யேகமாக உருவாக்கப்பட்டது. எனவே ஃபோனில் சரியாக வேலை செய்யாமல் போகலாம்.

NewPipe செயலி போன்றே இதனுடைய .apk file-ஐ பதிவிறக்கம் செய்து டிவிக்கு *

அனுப்பி நிறுவி பயன்படுத்தலாம். இதனுடைய

வலைதளம்

https://smarttubenext.github.io. APK file-ஐ பதிவிறக்கம் செய்ய இந்த QR Code-ஐ ஸ்கேன் செய்யுங்கள்.


Online Advertising F
Share of respondents saying they are
by advertising on the internet
45%
59%
42%
50%-59%
40%-49%
30%-39%

## மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

## ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3.

போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஒர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள்

Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே

ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும்

அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள்

வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து

கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Com-

mons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebook-steam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க

தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும்

பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை

[வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள்

அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM

FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

</முடிவு>

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

## மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/




**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

### தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

### கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech

- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

## அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ்

காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்

- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில்

வழங்குதல்

- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_-

preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில்

மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**




BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.